ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள்

அருளிய

# சிவபுராணம்

## திருவாசகம்



உரையாசிரியர்: தெய்வத்திரு

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்.

உ

ஸ்ரீ வெங்கடாசலபதி துணை

ஸ்ரீசபரிகிரிவாசன் சகாயம்

**20.02.2012 அன்று**

நடந்த எங்களின் பெற்றோர்களின்




திரு.**V. நாகசுப்ரமணியன்**

திருமதி. **கீதா நாகசுப்ரமணியன்**



அவர்களின் சஷ்டியப்தபூர்த்தி விழாவிற்கு

வந்த அனைவருக்கும் எங்கள் நன்றிகள்

**ஹரீஷ், நீரஜா, ராஜேஷ், மாயா**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய

# சிவபுராணம்

(உரையுடன்)

'அமுதமொழிக் கொண்டல்'

திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்

வெளியீடு

குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்

132 / 107, சிங்கண்ண தெரு, சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை - 600 002. தொலைபேசி : 2845 7666
Email : guhashri@gmail.com
Web : www.variyarswamigal.com

6 ஆம் பதிப்பு 2012

Rs.14

## மணிவாசகர் துதி

அருந்துரகம் பெறவளித்த
பெருந்தனத்தை எம்பெருமான்
அமர்ந்து வாழப்
பெருந்துறையில் பொற்றளிசெய்
தருளிமணி வாசகஞ்சொல்
பேறும் பெற்றுக்
குருந்தடியிற் குருவருள
பரமசுகப் பெருவாழ்விற்
குடியா யென்றும்
இருந்தருளும் எங்கோனை
வாதவூ ரடிகள்தமை
இறைஞ்சு வோமே.

*- வாரியார் சுவாமிகள் அருளியது!*

உ

சிவமயம்

# முன்னுரை

தமிழ் மறையாய், எட்டாந் திருமுறையாய், சிகா மந்திரமாய், சிவானுபவச் செல்வமாய், தெவிட்டாத இன்ப அமுதாய் விளங்குவது திருவாசகம். திருவாசகத்தை ஓதுவார்க்குப் பிறவித் துன்பம் நீங்கி சிவப்பேறு சித்திக்கும். இத் திருவாசகத்தை உள்ளங் குழைந்து ஓதுவார் எண்ணில்லாத அருள் நலங்களைப் பெறுவார்.

திருவாசகத்தில் முதலில் விளங்குவது சிவபுராணம். இது எல்லையில்லாத பெருமையுடையது. நூற்றெட்டு உபநிஷதங்களின் சாரமாக விளங்குவது.

"சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தின் உள்ளார்" என்று கூறியிருப்பதனால், பொருள் தெரிந்து பாராயணஞ் செய்தல் சாலப் பயனுடையது. சிவானுபவம் பெற்றவர்க்கே இது தெற்றென விளங்குஞ் சீருடையது. எனினும், திருவருளைச் சிந்தித்துச் சிறிது எழுதினேன்.

அன்பர்கள் அன்பு கூர்ந்து படித்துப் பாராயணம் புரிந்து அருட் செல்வர்களாய் விளங்குவார்களாக.

அன்பன்



சிவமயம்

# பாடல் அனுபவம்

*வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை*
*நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே*
*தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்*
*ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.*

திருவாசகத்தைப் பாடிப்பெற்ற அனுபவத்தை வள்ளற் பெருமானார் மேற்கண்டவாறு வரைந்துள்ளார்.

நான் கலந்து - நான் என்னும் உணர்வு தான் கரைந்து திருவாசகத்தைப் பாட வேண்டுமாம். அந்தத் திருவாசகத்தின் முடிமணியாகத் திகழ்வது சிவபுராணமாகும்.

ஓதுவார் தம்மை நன்னெறிக்கு உய்க்கும் நாதன் நாமமே 'நமச்சிவாய' என்பது.

அதனை முதலாகக் கொண்டு மொழியப் பெறுவதே 'நமச்சிவாய வாஅழ்க' எனத் தொடங்கும் சிவபுராணம்.

இதனை எளியோரும் பொருள் உணர்ந்து ஓதும் பொருட்டுப் பதவுரை, விளக்கவுரை, கருத்துரை முதலியன தந்து விளக்கியுள்ளார்; மீட்டிங்கு வந்து வினைப்பிறவிசாரா நிலையெய்தியுள்ள வாரியார் சுவாமிகள்.

சிரத்தையுடன் வெளியிடுகிறேன். 'சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை முந்தை வினை முழுதும் ஓய' ஓதுங்கள்.

இந்நூலைச் செப்பஞ் செய்து வெளிவரச் செய்த எங்கள் ஆஸ்தானப் புலவர் தருமபுரி க. தியாகசீலன் அவர்கட்கு நன்றி கூற மாட்டேன். ஏனெனில் அவரது கடமையே என் தாத்தா வாரியார் சுவாமிகள் நூல்களை வெளிவரச் செய்வதுதானே.

**தீபா மயிலப்பன்**
குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்

உ
சிவமயம்

# சிவபுராணம்

திருச்சிற்றம்பலம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க 5
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க 10
ஈசன் அடிபோற்றி எந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவ னடிபோற்றி 15
ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான் 20

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன் 25
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள் 30
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே 35
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே 40
ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்றமறை யோனே 45
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த

மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை 50
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோறும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய 55
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத் 60
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப் 65
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதா ருள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே 70
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின் 75
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே

ஆற்றின்ப வெள்ளமே யத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய் 80
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று 85
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே 90
அல்லற் பிறவி யறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து. 95

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# திருவாசகம்

## நூற் சிறப்பு

### வெண்பா

தொல்லை இரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்தம் ஆக்கியதே - எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

### பதவுரை

எல்லை மருவா நெறி அளிக்கும் - முடிவு இல்லாத வீட்டு வழியைத் தருகின்ற, வாதவூர் எம்கோன் - திருவாதவூரில் தோன்றிய எமது மாணிக்கவாசகப் பெருமானுடைய திருவாய் மலரில் தோன்றிய, திருவாசகம் என்னும் தேன் - திருவாசகம் என்று கூறுகின்ற தேன், தொல்லை இரும் பிறவி - தொன்று தொட்டு வரும் பெரும் பிறவியாகிய, சூழும் தளை நீக்கி - உயிரைச் சூழ்ந்துள்ள கட்டினை அகற்றி, அல்லல் அறுத்து - துன்பத்துக்குக் காரணமாகிய அறியாமையை அறுத்து, ஆனந்தம் ஆக்கியது இன்பத்தை விளைவித்தது. (ஏ - தேற்றம்.)

### விளக்கவுரை

இப்பாடலில் திருவாசகம் என்ற அரிய அருள் நூலை நமக்குப் பரம கருணையால் வழங்கிய பரமகுரு நாதருடைய பெருமையைச் சுருக்கமாகக் கூறுகின்றார். சரியை கிரியை யோகம் ஞானம் என்பதில் நான்காவது பாதமாகிய ஞானத்தின் வழியைச் சொன்னவர் ஆதலின், எல்லை மருவா நெறி அளிக்கும் என்று நான்கு சொற்களால் சிறப்பித்தார்.

**எல்லை மருவா நெறி**

வீட்டின்பந் துய்க்குந்தொறும் துய்க்குந்தொறும் முடிவு காணப்படாது நீளும் இயல்புடையது ஆதலின் எல்லை மருவா நெறி என்று கூறினார்.

**வாதவூர் எங்கோன்**

திருவாதவூரில் திருவவதாரம் புரிந்த மாணிக்க வாசகப் பெருமானார் எமக்கு அருட்பெருந் தலைவர்; அருளரசர். ஆதலின் எங்கோன் என்றனர்.

**திருவாசகம்**

கண்டாரால் விரும்பப்படும் திருவினை உடைய அருள் வாசகம்.

**தேன்**

தேன் மலரிலிருந்து வண்டு தரக் கிடைப்பது. வாதவூரராகிய வண்டு வேதாகமங்களாகிய மலர்களிலிருந்து எடுத்துச் சுவைபட வழங்கிய தேன் திருவாசகம்.

தேன் - தானுங் கெடாது; தன்னைச் சார்ந்த பொருளையும் கெட விடாது. அதுபோல், திருவாசகம் தானும் அழியாது நின்று, தன்னை ஓதுவாரையும் பிறவித் துயரில் வீழ்ந்து அழியாத, அருட்பாங்கினை வழங்குவது.

தேன் - பித்தத்தை நீக்கும்; அரோசகத்தை (உணவில் வெறுப்பை) மாற்றும்; உடலுக்கு உறுதி செய்யும்.

இதுபோல் திருவாசகமாகிய தேன் நெடுங்காலமாக உயிரைச் சூழ்கின்ற பெரும் பிறவியாகிய கட்டினை நீக்கும். அறியாமையை யகற்றும்; சிவபோகமாகிய பேரின்பத்தைத் தரும்.

திருவாசகம் - எழுவாய்; ஆக்கியது - பயனிலை.

திருவாசகம் பிறவித் துன்பத்தையும், அதற்கு ஏதுவாகிய அறியாமையையும் நீக்கி ஆனந்தம் ஆக்கியது எனக் கொள்க.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவபுராணம்

திருப்பெருந்துறையில் அருளிச் செய்தது
சிவனது அநாதி முறைமையான பழைமை

### கலிவெண்பா

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன்அடி வாழ்க! 5

பதவுரை

நமச்சிவாய வாழ்க - நமச்சிவாய என்ற திரு ஐந்து எழுத்து வாழ்க; நாதன் தாள் வாழ்க - நாத தத்துவத்தில் விளங்குந் தலைவனுடைய திருவடி வாழ்க.

இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் - கண் இமை ஒருகால் பொருந்தும் ஒரு கண நேரமும் என் உள்ளத்தினின்றும் அகலாதவனுடைய, தாள் வாழ்க - திருவடி வாழ்க.

கோகழி ஆண்ட - திருப்பெருந்துறையில் எழுந்தருளி அடியேனை ஆட்கொண்ட, குருமணி தன் தாள் வாழ்க - நாதனாகிய மாணிக்க மணியின் மலரடி வாழ்க.

ஆகமம் ஆகி நின்று - ஆகமமாகிய ஞான நூலின் பொருளாகி நின்று, அண்ணிப்பான் தாள் வாழ்க - அணுகி அருள்புரிவானுடைய திருவடி வாழ்க.

ஏகன் அநேகன் - ஒருவனாக இருந்தே பலவுருவங்களை

யுடையோனாய், இறைவன் - எப்பொருளிலுந் தங்கு வோனுடைய, அடி வாழ்க - திருவடி வாழ்க.

வேகங் கொடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க 10

பதவுரை

வேகம் கெடுத்து ஆண்ட - அடியேனுடைய மனத்தின் ஓட்டத்தைத் தொலைத்து ஆட்கொண்ட, வேந்தன் அடி வெல்க - தலைவனுடைய திருவடியே வெற்றி பெறுக.

பிறப்பு அறுக்கும் - பக்குவப்பட்ட உயிர்களின் பிறவியை அறுத்து மாற்றுகின்ற, பிஞ்ஞகன் தன் - சிவ பெருமானுடைய, பெய்கழல்கள் வெல்க - வீர கண்டை யணிந்த திருவடிகள் வெற்றி பெறுக.

புறத்தார்க்கு - அன்பில்லாத புறச் சமயத்தார்கட்கு, சேயோன் தன் - எட்டாதவனான இறைவனுடைய, பூ கழல்கள் வெல்க - மெல்லிய மலர் போன்ற திருவடிகள் வெற்றி பெறுக.

கரம் குவிவார் உள் மகிழும் கோன் - கை கூப்பித் தொழும் அன்பர்கள் உள்ளத்தே நினைத்து நினைத்து மகிழ்கின்ற இறைவனுடைய, கழல்கள் வெல்க - திருவடிகள் வெற்றி பெறுக.

சிரம் குவிவார் ஓங்குவிக்கும் - தலைமேல் கரங்கூப்பி வணங்கும் அடியார்களை உயர்த்துகின்ற, சீரோன் கழல் வெல்க - சிறப்புடையோனுடைய திருவடி வெற்றி பெறுக.

ஈசனடி போற்றி எந்தையடி போற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி

நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி
ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி **16**

பதவுரை

ஈசன் அடி போற்றி - தலைவனுடைய திருவடிக்கு வணக்கம், எந்தை அடி போற்றி - எமது தந்தையினுடைய திருவடிக்கு வணக்கம்.

தேசன் அடிபோற்றி - ஒளி வடிவினனுடைய திரு வடிக்கு வணக்கம்; சிவன் சே அடி போற்றி - சிவபெரு மானுடைய சிவந்த திருவடிக்கு வணக்கம்; நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி - அடியார்களின் அன்பின் கண் விளங்குகின்ற மாசற்றவனுடைய திருவடிக்கு வணக்கம்; மாய பிறப்பு அறுக்கும் - வஞ்சனை, பொய் முதலியன புரிகின்ற இப்பிறவியை வேருடன் களைகின்ற, மன்னன் அடி போற்றி - நிலைபெற்றவனுடைய திருவடிக்கு வணக்கம்; சீர் ஆர் பெருந்துறை - சிறப்பு நிறைந்த திருப் பெருந்துறையில் எழுந்தருளிய, நம் தேவன் அடிபோற்றி - நமது தேவனுடைய திருவடிக்கு வணக்கம், ஆராத இன்பம் அருளும் மலை போற்றி - தணிதல் இல்லாத இன்பத்தை வழங்கும் மலை போன்றவனுக்கு வணக்கம்.

சிவன்அவன்என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான் **20**

பதவுரை

சிவன் அவன் - சிவமூர்த்தியாகிய அப்பெருமான், என் சிந்தை உள் நின்ற அதனால் - அடியேனுடைய நினை வினுள் நிலைபெற்றிருக்கின்றபடியால், அவன் அருளாலே

அவன் தாள் வணங்கி - அப்பெருமானுடைய திருவருளாலே அவ்விறைவனுடைய திருவடியை வணங்கி, சிந்தை மகிழ - உள்ளம் மகிழ, சிவபுராணம் தன்னை - சிவனது பழைய முறைமையினை, முந்தை வினை முழுதும் ஓய - முன்னைய வினைகள் முற்றும் தேய்ந்து போகும் பொருட்டு, யான் உரைப்பன் - அடியேன் சொல்லுவேன்.

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்றறியேன் 25

பதவுரை

கண்ணுதலான் - நெற்றிக்கண்ணையுடைய இறைவன், தன் கருணைக் கண் காட்ட வந்து எய்தி - தனது அருள் கண் காட்டலும் அப்பெருமான் திருமுன்பு வந்து அடைந்து, எண்ணுதற்கு எட்டா - நினைவிற்கும் எட்டாத, எழில் ஆர் கழல் இறைஞ்சி - அழகு நிறைந்த திருவடியை வணங்கி, விண் நிறைந்து - வானம் முழுவதும் நிறைந்து, மண் நிறைந்து - மண் முழுவதும் நிறைந்து, மிக்காய் - அதற்கு அப்பாலும் நிறைந்தவனே! விளங்கு ஒளியாய் - சிறந்த ஒளி வடிவினனே! எண் இறந்து எல்லை இலாதானே - எண்ணிக்கையின் அளவைக் கடந்து வரம்பு இன்றி விரிந்தவனே! நின் பெரும் சீர் - உனது பெரும் புகழினை, பொல்லா வினையேன் - தீவினை யுடையேன், புகழும் ஆறு ஒன்று அறியேன் - புகழ்ந்து உரைக்கும் வகை ஒன்றையும் அறியாதவனாக இருக்கின்றேன்.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்

செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள் 30
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்

பதவுரை

புல் ஆகி - புல்லாகியும், பூடு ஆய் - பலவகைப் பூண்டுகளாகியும், புழு ஆய் - புழுவாகியும், மரம் ஆகி - பலவகையான மரங்களாகியும், பல் விருகம் ஆகி - பல விலங்குகளாகியும், பறவை ஆய் - பறவைகளாகப் பிறந்தும், பாம்பு ஆய் - பாம்புகளாகியும், கல் ஆய் - கற்பாறைகளின் உள்ளாகியும், மனிதர் ஆய் - மனிதராகியும், பேயாய் - பேய்களாகியும், கணங்கள் ஆய் - பூதர் சித்தர் முதலிய கூட்டங்களாகியும், வல் அசுரர் ஆகி - வலிய அரக்கராகியும், முனிவர் ஆய் - தவமுனிவர்களாகியும், தேவராய் - வானவர்களாகியும், செல்லாநின்ற - படைக்கப்பட்டு வந்துள்ள, இத் தாவர சங்கமத்துள் - இந்த அசையாப் பொருள்கள் அசைகின்ற பொருள்கள் ஆன இவற்றுள், எல்லா பிறப்பும் பிறந்து இளைத்தேன். எம்பெருமான் - எம்பெருமானே அடியேன் எல்லாப் பிறவிகளிலும் பிறந்து இளைப்பு அடைந்தேன்.

மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே 35

பதவுரை

மெய்யே உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடு உற்றேன் - உண்மையாகவே உனது அழகிய திருவடிகளைக் கண்டு இன்று விடுதலையடைந்தேன்.

உய்ய என் உள்ளத்துள் - அடியேன் பிழைக்கும் பொருட்டு என் உள்ளத்தினுள்ளே, ஓங்காரமாய் நின்ற மெய்யா - ஓம் என்ற பிரணவவுருவாய் நின்ற உண்மைப்

பொருளே! விமலா - மாசற்றவனே! விடை பாகா - எருதின் மீது ஊர்ந்தவனே! வேதங்கள் ஐயா என - அறிவு நூல்கள் தலைவனே என்று அழைக்க, ஓங்கி - மேல் உயர்ந்தும், ஆழ்ந்து - கீழ் ஆழ்ந்தும், அகன்ற - விசாலமாயும், நுண்ணியனே - கூர்மையாயும் நின்ற பெருமானே!

வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா
பொய்யாயின எல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே 40

பதவுரை

வெய்யாய் - வெம்மையுடையவனே! தணியாய் - குளிர்ச்சியுடையவனே, இயமானன் ஆம் விமலா - யாகத் தலைவன் உள் விளங்கும் தூயவனே!

பொய்யாயின எல்லாம் போய் அகல வந்து அருளி - பொய்யான நினைவு சொல் செயல் அனைத்தும் போய் நீங்கக் குருவடிவாக வந்து அருள்புரிந்து, மெய் ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய் சுடரே - உண்மை அறிவாகி ஒளி செய்கின்ற உண்மை யொளியே! எஞ்ஞானம் இல்லாதேன் இன்ப பெருமானே - எவ்வகையான அறிவும் இல்லாத அடியேனுக்கு இன்பத்தைத் தந்தருளிய பெருமானே!

அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல் அறிவே - அறியாமையை மாயை கன்மங்களால் அகலச் செய்யும் நல்ல அறிவாய் விளங்குபவனே!

ஆக்கம் அளவிறுதி இல்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பில்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனம்கழிய நின்ற மறையோனே 45

பதவுரை

ஆக்கம் அளவு இறுதி இல்லாய் - தோற்றமும் ஒரு கால எல்லை வரை நிற்றலும் முடிவும் இல்லாதவனே! அனைத்து உலகும் ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய் - எல்லாவுலகங்களையும் படைப்பாய், காப்பாய், ஒடுக்குவாய், முடிவில் பக்குவான்மாக்கட்கு அருளையுந்தருவாய்; போக்குவாய் - வினைகளைப் போக்கு பவனே! என்னை நின் தொழும்பில் புகுவிப்பாய் - அடியேனை உனது திருத்தொண்டில் செலுத்துபவனே! நாற்றத்தின் நேரியாய் - பூவில் மணம்போல் அன்பர் உள்ளத்தில் பொருந்தியிருப்பவனே! சேயாய் - அன்பரல்லாதார்க்கு எட்டத்தில் இருப்பவனே! நணியானே - அன்பர்க்குக் கிட்டத்தில் இருப்பவனே! மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே - சொல்லுக்கும் நினைவுக்கும் அப்பாற்பட்டு நின்ற மறைப்பொருளாயுள்ளவனே!

**கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தால் போலச்**
**சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று**
**பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான் 48**

பதவுரை

கறந்தபால் கன்னலொடு நெய் கலந்தால்போல - கறந்த பாலில் சருக்கரையும் தேனும் கலந்ததுபோல், சிறந்த அடியார் சிந்தனை உள் - உத்தமமான அடியார்களுடைய நினைவினுள், தேன் ஊறி நின்று - இனிமை ஊற்றெடுக்கு மாறு நிலைத்து விளங்கி, பிறந்த பிறப்பு அறுக்கும் - பிறந்த பிறவியைத் தொலைக்கும், எங்கள் பெருமான் - எமது பெருமானே!

**நிறங்கள் ஓர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த**
**மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை**
**மறைந்திட மூடிய மாய இருளை**
**அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி**

புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயில் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் உருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
**நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி**
நாயில் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயில் சிறந்த தயாவான தத்துவனே 61

பதவுரை

நிறங்கள் ஓர் ஐந்து உடையாய் - ஒப்பற்ற ஐந்து நிறங்களை யுடையவனே! விண்ணோர்கள் ஏத்த மறைந்து இருந்தாய் - வானுலகில் வாழுந் தேவர்கள் போற்றவும் அவர்க்கு வெளிப்படாமல் மறைந்திருந்தனை, எம்பெருமான் - எமது பெருமானே! வல்வினையேன் தன்னை - கொடிய வினையேனை, மறைந்திட மூடிய இருளை மாய - அறிவு மறையுமாறு மூடிய ஆணவ இருள் மாயும் பொருட்டு, அறம் பாவம் என்னும் அரும் கயிற்றால் கட்டி - நல்வினை தீவினை என்னும் அரிய கயிற்றால் பிணித்து, புறம் தோல் போர்த்து - வெளியே தோலினைப் போர்வையாக இட்டு, எங்கும் புழு அழுக்கு மூடி - எவ்விடத்துமுள்ள புழுக்களும் அழுக்குகளும் தெரியாமல் இருக்கும்படி மறைத்து, மலம் சோரும் ஒன்பது வாயில் குடிலை - ஒன்பது வாயில்களிலும் மலம் வடிகின்ற உடம்பாகிய குடிசையை, மலங்க புலன் ஐந்தும் வஞ்சனையை செய்ய - கலங்குமாறு ஐம்புலன்களும் வஞ்சனையைப் புரிய, விலங்கு மனத்தால் - மாறுபடுகின்ற மனத்தினால், விமலா - மாசில்லாதவனே, உனக்கு கலந்த அன்பு ஆகி - உன்னிடம் கலந்த அன்பு மேலிட்டு, கசிந்துஉள் உருகும் நலந்தான் இலாத - உள்ளம் கசிவு பெற்று உருகுகின்ற நலம் இல்லாதவனாகிய, சிறியேற்கு நல்கி - சிறியவனுக்குத் தந்து, நிலம் தன்மேல் வந்து அருளி -

இந்நிலத்தின்மீது குருவடிவாக வந்தருளி, நீள் கழல்கள் காட்டி - மற்றவர்கள் காண முடியாது நீளுகின்ற திருவடியை அடியேன் காணுமாறு காட்டி, நாயில் கடையாய் கிடந்த அடியேற்கு - நாயினும் இழிவாகக் கிடந்த அடியேனுக்கு, தாயில் சிறந்த தயா ஆன தத்துவனே தாயினும் சிறந்த அருள் வடிவான உண்மைப் பொருளே!

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே **66**

பதவுரை

மாசு அற்ற சோதி மலர்ந்த மலர் சுடரே - களங்கம் இல்லாத ஒளி நிறைந்த மலரின் ஒளியே! தேசனே - குரு பரனே! தேன் ஆர் அமுதே - இனிமை நிறைந்த அமுதமே! சிவபுரனே - கைலாயபதியே! பாசம் ஆம் பற்று அறுத்து - மும்மலப் பிடிப்பை அறுத்து, பாரிக்கும் ஆரியனே - என் அறிவை வளர்க்கும் மேலோனே! நேச அருள் புரிந்து - அன்புடன் அருளும் பாலித்து, நெஞ்சில் வஞ்சம்கெட - நெஞ்சிலிருந்த பொய்மை கெடுமாறு, பேராது நின்ற பெரும் கருணை பேர் ஆறே - அந்நெஞ்சை விட்டு நீங்காது நிலை யாய் நின்ற பேரருள் வெள்ளம் பெருக்கெடுத்தோடும் நதியே!

ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே **74**

பதவுரை

ஆரா அமுதே - தெவிட்டாத அமிழ்தமே! அளவு இலா பெம்மானே - அளவுபடுத்த முடியாத இயல்பினையுடைய பெருமானே! ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே - ஆராயாதவர் உள்ளத்தின்கண் மறைந்துறையும் ஒளிமயமானவனே! நீராய் உருக்கி என் ஆர் உயிராய் நின்றானே - என் மனதை நீராக உருகுமாறு செய்து எனது அரிய உயிராக நின்றவனே! இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே - இன்பம் துன்பம் என்ற இரண்டும் இல்லாதவனே! அவைகளை யுடையவனே! அன்பருக்கு அன்பனே - அன்புடையோர்பால் அன்பனா யிருப்பவனே! யாவையும் ஆய் அல்லையும் ஆம் - எல்லாப் பொருள் களுமாய் அவை யல்லாத வேறுமாகி நிற்கும், சோதியனே - ஒளி வடிவினனே! துன் இருளே - செறிந்த இருளாகவும் நிற்பவனே! ஆதியனே - எப்பொருளுக்கும் முதற்பொருளாக விளங்குபவனே! அந்தம் நடுவு ஆகி அல்லானே - முடிவும் நடுவும் ஆகி அவை அல்லாதவனுமாயிருப்பவனே! ஈர்த்து என்னை ஆட்கொண்ட - அடியேனை வலிய இழுத்து அடிமை கொண்டருளிய, எந்தை பெருமானே - எமது பரம பிதாவாக நிற்கும் பெருமானே!

> கூர்த்தமெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தில்
> நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
> போக்கும் வரவும் புணர்வும்இலாப் புண்ணியனே
> காக்கும்எம் காவலனே காண்பரிய பேரொளியே **78**

பதவுரை

கூர்த்த மெய்ஞ்ஞானத்தால் கொண்டு உணர்வார் தம் கருத்தில் - கூரிய மெய்யறிவினால் உள்ளங்கொண்டு உணர்வாருடைய கருத்தினாலும், நோக்கு அரிய நோக்கே - நோக்குதற்கு அரிய நோக்கமே! நுணுக்கு அரிய நுண் உணர்வே - நுட்பமாக உணர்வதற்கும் அருமையான

நுண்ணிய உணர்வே! போக்கும் வரவும் புணர்வும் இலா - இறத்தலும் பிறத்தலும் கூடுதலும் இல்லாத, புண்ணியனே - புனிதப் பொருளே! காக்கும் எம் காவலனே - எல்லா வற்றையுங் காத்தருளும் எமது அரசனே! காண்பு அரிய பேர் ஒளியே - காண்பதற்கு அரிய ஒளியே!

ஆற்றின்ப வெள்ளமே அத்தா மிக்காய் நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேஎன் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே **83**

பதவுரை

ஆற்று இன்ப வெள்ளமே - நல்ல ஆற்றில் பெருகும் இன்ப வெள்ளமே! அத்தா - அப்பனே! மிக்காய் - மேலானவனே! நின்ற தோற்ற சுடர் ஒளியாய் - நிலை பெற்று நின்ற உதய சூரிய ஒளியாயும், சொல்லாத நுண் உணர்வு ஆய் - சொல்ல வொண்ணாத நுண்ணிய உணர்வு ஆகியும், மாற்றம் ஆம் வையகத்தின் - மாறுபாட்டினை யுடைய இந்த நிலவுலகின்கண், வெவ்வேறே வந்து அறிவாம் தேற்றனே - வேறு வேறாய் வந்து அறிவாய் விளங்கும் தெளிவினனே! தேற்ற தெளிவே - தெளிவினில் தெளிவே, என் சிந்தனையுள் - அடியேனுடைய நினைவினுள், ஊற்று ஆன உண் ஆர் அமுதே - ஊற்றாகச் சுரக்கும் உண்பதற் கினிய அரிய அமிழ்தமே! உடையானே - எப்பொருளையும் எவ்வுயிரையும் உடையவனே!

வேற்று விகார விடக்குடம்பின் உள்கிடப்ப
ஆற்றேன்எம் ஐயா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்துஇருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே **89**

### பதவுரை

வேற்று விகார விடக்கு உடம்பின் உள்கிடப்ப ஆற்றேன் - வேறு வேறு வகையாகத் திரிவுபட்டுள்ள புலால் உடம்பின் உள்ளே கிடக்கும் துன்பத்தை இனிப் பொறுக்கமாட்டேன்! எம் ஐயா - எமது தலைவனே! அரனே - சிவபெருமானே! ஓ என்று என்று - ஓ என்று அலறித் துதித்து, போற்றி புகழ்ந்து இருந்து - வணங்கி புகழ்ந்த வண்ணமாகவே யிருந்து, பொய்கெட்டு மெய் ஆனார் - பொய்மை நீங்கி மெய்ம்மையடைந்தனர், மீட்டு இங்கு வந்து - மீளவும் இவ்வுலகின் கண் வந்து, வினை பிறவி சாராமே - வினையாலாகிய பிறவியை எடுக்காமல், கள்ள புல குரம்பை - வஞ்சனையைச் செய்யும் ஐம்புலன்களுக்கு உறை விடமாகிய சிறு வீடாகிய இவ் வுடம்பின், கட்டு அழிக்க வல்லானே - கட்டுக்கோப்பை அழிக்க வல்லவனே! நள் இருளில் - நடு இருளிலே, நட்டம் பயின்று ஆடும் நாதனே - திருநடனம் பலகாலும் ஆடுகின்ற தலைவனே!

தில்லையுள் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லல் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள்உணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து. 95

### பதவுரை

தில்லை உள் கூத்தனே - தில்லை யம்பலத்துள் கூத்தாடு பவனே! தென்பாண்டி நாட்டானே - தென் திசையில் விளங்கும் பாண்டி நாட்டினை யுடையவனே! அல்லல் பிறவி அறுப்பானே - துன்பத்திற்கு இடமாகிய பிறவியை அறுப்பவனே! ஓ என்று - ஓ என்று அரற்றி, சொல்லற்கு அரியானை - வாக்கினால் சொல்லிப் புகழ்வதற்கு அரியவனை, சொல்லி - இயன்ற மட்டும் துதித்து, திரு

அடி கீழ் சொல்லிய - அப்பரமனுடைய திருவடியின்கீழ் அடங்கி இருந்து சொல்லிய, பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் - பாடலின் பொருளை உணர்ந்து துதிக்க வல்லவர், சிவபுரத்தின் செல்வர் - சிவலோகத்திற் செல்லுவார்கள்; பல்லோரும் ஏத்த பணிந்து சிவனடி கீழ் உள்ளார் - பலரும் துதி செய்யப் பணியுடையராய் சிவ பெருமான் திருவடியின்கீழ் பேரின்பமுற்று இருப்பார்கள்.

## விளக்கவுரை

**நமச்சிவாய வாழ்க -**

திருப்பெருந்துறையுள் மாணிக்கவாசக சுவாமிகட்கு இறைவன் குருவடிவாக எழுந்தருளிவந்து திரு ஐந்தெழுத்தை உபதேசித்தருளினார். செவி வழியாகச் சென்ற அத் திருவைந்தெழுத்து உள்ளே பெருகிப் பொங்கித் ததும்பி உலகம் உய்ய அப் பெருமானாருடைய வாய் மலர் வழியே தேனாக வழியத் தொடங்கிற்று.

எது வாழ்ந்தால் உலகம் யாவும் வாழுமோ, எது அகில வுலகங்களையும் ஆக்கியும் அளித்தும் அழித்தும் மறைத்தும் அருளவல்லதோ, எது உலகங்கட்கெல்லாந் தாயகமாக விளங்குகின்றதோ, அம் மகா மந்திரமாகிய "நமசிவாய" என்ற அருள்வாக்கியம் வாழ்வதாக என்று வாழ்த்து கின்றனர்.

வடமொழியில் ய என்ற எழுத்து தமிழில் நான்காம் வேற்றுமை உருபாகிய கு என நின்று பொருள்படும். நமசிவாய - வணக்கம் சிவபெருமானுக்கு என்று பொருள் படும். இம்மந்திரம் வேதத்தின் நடுவில் உயிர்போல் விளங்குகின்றது.

வேதங்கள் மூன்று. (அதர்வண வேதம் எல்லாம் கலந்த ஒரு கலவை.) வேதத்ரயம் என்பர். இந்த மூன்று வேதங்களில் நடுவில் உள்ளது யஜுர்வேதம். அவ்வேதம் 101 சாகைகளை

யுடையது; அவற்றின் நடுவில் உள்ளது 51-ம் சாகை. அதுவே ஸ்ரீ போதாயன சாகை என்று சொல்லப்படும். அது ஏழு காண்டங்களையுடையது. அவற்றின் நடுவில் உள்ளது நாலாவது காண்டம். அக்காண்டம் ஏழு சம்ஹிதைகள் கொண்டது. அந்த ஸம்ஹிதைகளின் நடுவிலுள்ளது ஐந்தாவது பிரச்னம். அதன் நடுவிலுள்ளது. 'நம: ஸோமாயச' என்று தொடங்குகின்ற அநுவாகம். அவ்வநுவாகத்தில் நடுவிலுள்ளது சகல வேதசாரமான திருஐந்தெழுத்து.

**ந** - திரோத மலம்;

**ம** - ஆணவ மலம்;

**சி** - சிவம்;

**வ** - திருவருள்;

**ய** - ஆன்மா; இந்த ஐந்து பொருள்களையும் பஞ்சாக்கரம் என உணர்க.

> சிவன்அருள் ஆய சிவன்திரு நாமம்
> சிவன்அருள் ஆன்மாத் திரோத மலமாயை
> சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
> பவம தகன்று பரசிவன் ஆமே.
>
> - *திருமந்திரம்.*

இரண்டாவது வரியில் திருவைந்தெழுத்தாகிய, சிவாய நம என்பதற்குப் பொருள் கூறியுள்ளார்.

> "வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
> நாதன் நாமம் நமச்சி வாயவே"
>
> - *சம்பந்தர்.*

> "நாவினுக் கருங்கலம் நமச் சிவாயவே"

> "நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
> நமச்சி வாயவே நானறி விச்சையும்
> நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
> நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே"
>
> - *அப்பர்.*

"நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயவே"

- *சுந்தரர்*

"நமசிவயப் பொருளானே" - அருணகிரிநாதர்

"நற்ற வத்தவர் உள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே"
- வள்ளலார்.

இத்தகைய திருஐந்தெழுத்தை ஓதுந்தோறும் ஓதுந் தோறும் ஆணவ மலந் தேய்ந்து ஆன்ம சக்தி மிகுந்து சிவவொளி வாய்க்கப்பெற்றுப் பேரின்ப முறுவர்.

ஒன்று கண்டீர் உலகுக் கொருதெய்வமும்
ஒன்று கண்டீர் உலகுக் குயிராவது
நன்று கண்டீர்இனி நமச்சிவா யப்பழம்
தின்று கண்டேற்கிது தித்தித்த வாறே. - திருமந்திரம்.

நாதன் தாள் வாழ்க :-

மேற்போந்த திருஐந்தெழுத்தினை ஓதுங்கால் நாதந் தோன்றும். அந்த நாத தத்துவத்தில் விளங்குகின்ற தலைவனு டைய திருவடி வாழ்க.

விந்துவில் திருவருட் சக்தி தோய்தலும், அதன் வேகத்தை ஆற்றாத விந்து தத்துவம் எண்ணில்லாத வேகத்துடன் சுழன்றது; அதினின்றும் நாதம் தோன்றி யது.

சுழன்றது விந்து; நீண்ட ஒலியுடன் வந்தது நாதம்; இது தான் பிள்ளையார் சுழி "உ".

சுழன்று படுத்திருப்பது பாம்பு. அது விந்து, அதனை அணிவது நாதம்.

"நாக மணிகின்ற நாத னிலைகண்டு
நாடி யதில்நின்று தொழுகேனே"

என்கின்ற அருணகிரியாருடைய பாடல் இந்தத் தத்துவத்தைக் குறிக்கின்றது.

**இமைப் பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான்:-**

உயிர்களின் இதய தாமரையில் இறைவன் வீற்றிருக்கின்றான்.

**'ஸர்வானன சிரோக்ரீவ: ஸர்வபூத குஹாசய'**

*- கிருஷ்ண யஜுர்வேத சுவேதாசுவதரோபநிஷத்*

எங்கும் முகத்தையும் தலையையுமுடையவன், எல்லா உயிர்களின் உள்ளத்திலும் உள்ளவன்.

**"மலர்மிசை யேகினான்"** என்பது வள்ளுவனார் வாக்கு.

அவனை நினையாதார் உள்ளத்துள் பாலில்படு நெய் போல் மறைந்திருக்கின்றான் இறைவன்; இடையறாது நினைந்துருகும் அடியார் நெஞ்சில் தயிரில் நெய்போல் விளங்கித் தோன்றுவான்.

**"நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்"** - *அப்பர்*

**கோகழியாண்ட:-**

கோகழி என்பது திருப்பெருந்துறையைக் குறிக்கும். இதற்குத் திருவாவடுதுறை யெனவும் பொருள் கொள்வார்; அது சிறப்புடையதாகாது. அடிகளாரை, இறைவன் குருவடிவாக வந்து ஆட்கொண்ட இடம் திருப்பெருந்துறையே யாகும்.

கோ-தலைமை; கழி-துறை, கோகழி-பெருந்துறை.

கோ-பசுபோதத்தை; கழி-கழித்து ஆட்கொண்டான் என்று கூறினும் அமையும்.

**குருமணி:-**

இறைவன் குருமூர்த்தமாக வந்தான். அப்பெருமான் திருமேனி மாணிக்கமணி யன்ன செம்மேனியாக ஒளி செய்தது.

**'மாணிக்கம் ஒத்து மரகதம் போன்று வயிரம் மன்னி**
**ஆணிக் கனகமும் ஒக்கும் ஐயாறன் அடித்தலமே'** - *அப்பர்*

**ஆகமம் ஆகி நின்று அண்ணிப்பான்:-**

ஆ என்ற உப சர்க்கம் அன்மைப் பொருளையும் கம்- என்ற சொல் போதலையும் உணர்த்தும். எனவே ஆகமம் என்ற சொல் போய்ச் சேர்தல் என்று பொருள்படும்.

சிவபெருமானைச் சென்று அணுக வைக்கும் ஞான நூல்கள் ஆகும்.

அண்ணித்தல்-நெருங்கி வந்து அருள் புரிதல்;

அண்ணித்தல்-இனித்தல் என்றும் பொருள்படும்.

ஆகமப் பொருளாகி நின்று நெருங்கி வந்து இனிக்க அருள்புரிவான் இறைவன்.

**ஏகன் அனேகன் இறைவன்:-**

சிவமூர்த்தி ஒருவரே அகில உலகங்கட்கும் தனிப் பெருந் தலைவர். அவரே பரம்பொருள்.

> 'ஸ சிவ ஏகோதேவ'
> "ஸர்வஸ்ய ப்ரபும் ஈசானம்"
> "ஏக ஏவ சிவோ நித்ய"
> "ஏக ஏவ ருத்ரோ நத்விதீயாயதஸ்தே"

என்று உபநிஷதங்கள் முறையிடுகின்றன.

அப்பெருமான் அடியார்கள் பொருட்டுப் பல்வேறு திருமேனி எடுத்துக் கொள்ளுகின்றார். அதனால், அநேகன் என்றார்.

இறைவன்-எப்பொருளிலும் தங்குகின்றவன்; இறு என்ற பகுதியடியாகப் பிறந்தது இறைவன் என்ற சொல்.

**வாழ்த்துவது ஏன்?**

அழிவில்லாத ஆண்டவனை நாம்-சிற்றறிவும் சிறு தொழிலும் அற்ப ஆயுளும் உடைய நாம் வாழ்த்துவது ஏன்? நீர் நெருப்பு கனி நெல் காற்று மரம் செடி கொடி முதலிய அனைத்தும் வாழ்ந்தால்தான் உயிர்களாகிய நாம் வாழ

முடியும். நீர் வாழ்க, நிலம் வாழ்க, செடி வாழ்க, கொடி வாழ்க என்று எல்லாவற்றையும் வாழ்த்துவது இயலாத காரியம். ஆயிரம் மணிகள் ஒரு நூலால் கோவைப்பட்டுள்ளன. ஆயிரம் மணிகளையும் தனித்தனியே அசைப்பது கடினம். ஆயிரம் மணிகளிலும் நுழைந்துள்ள நூலையசைத்தால் மணிகள் யாவும் அசையுந்தானே? அதுபோல் எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்திருக்கின்ற சிவபெருமானை வாழ்த்தினால் அகில உலகங்களும் வாழும் எனவுணர்க. இங்கே சுவாமிகள் ஆறுமுறை வாழ்க என்று வாழ்த்துகின்றார்.

இனி இறைவனுடைய திருவடியே வெற்றி பெறுவதாக என்று கூறத் தொடங்குகின்றார்:

**வேகங் கெடுத்தாண்ட வேந்தன்:-**

வேகம் என்பது விரைவு என்ற பொருளில் வந்தது. வாயு வேகம் மனோவேகம் என்று கூறுவார்கள். சிவயோக நெறியில் ஸ்ரீ பஞ்சாட்சரத்தை ஓதி, அவமே பிரியும் பிராண வாயுவின் வேகத்தையும், அதனால் எண்ணில் கோடி வேகமாகத் திரிந்துழலும் மனவேகத்தையும் தடுக்க வேண்டும்.

**"தடுங்கோள் மனத்தை"** என்பார் அருணகிரி நாதர்.

வினையின் வேகம் எனினும் பொருந்தும்.

**பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள்:-**

சிவபெருமான் ஒருவரே பிறப்பில்லாதவர்; ஆதலால். அவரே பிறப்பையொழித்து அருளுவார். ஏனைய தேவர்கள் பிறப்பிறப்புடையவர்கள். பிஞ்ஞகம்-தலைக்கோலம். தலையை நன்கு அலங்கரித்திருப்பதனால் சிவபெருமான் பிஞ்ஞகன் எனப் பெற்றனன். சிவபெருமான் தலையில் நதி மதி கொன்றை அரவு கொக்கிறகு அறுகு இவைகள் இனிது அழகு செய்து கொண்டிருக்கின்றன.

'கிரணகுறைப் பிறையறுகக் கிதழ்மலர்கொக் கிறகோடே
படர்சடையிற் புனைநடனப் பரமர்' - திருப்புகழ்

பெய்கழல்கள்-பெய்தல்-செறித்தல், கழல்-வீரகண்டை. இறைவனுடைய திருவடி காலனை யுதைத்த வீரமுடையது என்பதற்கு அடையாளமாக வீரக் கழலுடன் கூடியது.

**புறத்தார்க்குச் சேயோன்:-**

புறத்தார் - அன்புச் சமயத்திற்கு அப்பாற்பட்டவர்கள்.

**கரங் குவிவார் உள்மகிழும் கோன்:-**

கரங்குவித்து வணங்குவதன் உட்பொருள்: செயல் செய்வது கரங்கள்; "இறைவனே என் செயல் யாதொன்று மில்லை, எல்லாம் நின் செயலே," என்று செயலடங்கி நிற்கும் நிலையைக் குறிப்பிடுவது.

"என்செயல் அழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவர என்றுநின் தெரிசனைப் படுவேனோ"
- திருப்புகழ்.

இவ்வண்ணம் செயலற்று நின்ற செம்மையாளர் உள்ளத்துள் நினைந்து நினைந்து உவகையுறும் தன்மையன் இறைவன்.

**சிரங் குவிவார் ஓங்குவிக்கும் சீரோன்:-**

தலைக்குமேல் கரங்களைக் கூப்பிக் கும்பிடுவோர்க்கு இறைவன் இனிய அருள்புரிவான்.

'.................................... முடிமேலே
அஞ்சலி செய்வோர்கள் நேயக்கார' - திருப்புகழ்.

வெல்க வெல்க என்று ஐந்து முறை கூறுகின்றனர். வெல்லப்படுபவை ஐம்புலன்களேயாகும்.

"வென்ற ஐம்புலனின் மிக்கீர்" - பெரியபுராணம்.

'புலனைந்தும் வென்றான் தன் வீரமே வீரம்' - ஔவையார்.

ஐம்புலன்களையும் இறைவன் திருவடித் துணையா லேயே வெல்லலாம் என்ற குறிப்பையுணர்க.

**ஈசன் அடி போற்றி:-**

ஈசன்-எல்லா வுலகங்களையும் ஆள்வோன்.

**எந்தை:-**

இறைவன் எல்லாவுயிர்கட்கும் பரம பிதாவாக நின்று அருள்புரிகின்றான்.

**தேசன்:-**

தேசு-ஒளி; தேஜஸ் என்ற சொல்லிலிருந்து வந்தது.

சிவபெருமான் அருள் ஒளி யுருவானவர்.

"சோதியே சுடரே சூழொளி விளக்கே" - *திருவாசகம்.*

**சிவன்:-**

இறைவனுடைய திருநாமங்களுள் தலையாயது சிவன் என்ற நாமம்.

**'சிவமெனும் நாமம் தனக்கே யுடைய**
**செம்மேனி யெம்மான்'** - *அப்பர்.*

செம்மைப் பண்புடையவன் என்று பொருள். இதனையே செம்பொருள் என்று திருவள்ளுவர் கூறு வார்.

**பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்**
**செம்பொருள் காண்ப தறிவு.**

**நேயத்தே நின்ற நிமலன்:-**

இறைவன் அடியார்களிடம் மிகுந்த நட்புடையனாக நின்று அருள்புரிகின்றான். சுந்தரருடைய நேயத்தை விரும்பி இரவில் பரவையார் மனைக்குத் தூது சென்ற கருணை நினைவு கூர்தற்குரியது.

**மாயப் பிறப்பறுக்கும் மன்னன்:-**

உடம்பு கருவி கரணங்கள் மாயையால் வந்தன ஆதலின் மாயப்பிறவி யென்றார்.

**சீரார் பெருந்துறை நம்தேவன்:-**

சிறப்புடைய திருப்பெருந்துறையில் இறைவன் குருவடிவாக வந்து அடிகளாருக்கு அருள்புரிந்தான். ஆதலின், நம் தேவன் என்று உரிமையுடன் கூறுகின்றனர். எட்டு முறை போற்றி என்கின்றார். இது அஷ்டமலர் கொண்டு வணங்கும் அருட் பூசையைக் குறிக்கும்.

**சிவன்அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்:-**

சிவமாகிய அப் பரம்பொருள் நினைவில் நீங்காது நிற்பதனால் அறிவில் தெளிவு உண்டாகின்றது. அதனால், நலங்கள் பல விளைகின்றன.

**அவன் அருளாலே அவன் தாள் வணங்கி**
**சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை**
**முந்தை வினை முழுதும் ஓய உரைப்பனியான்:-**

சிவமூர்த்தி சிந்தையில் நிற்பதனால் உள்ளம் உவந்து அப் பெருமானுடைய திருவருளால் ஏவப்பட்டு, அத் திருவருளையே துணையாகக் கொண்டு, இதனை ஓதும் என் முன்னை வினை தீரும் பொருட்டுச் சிவபுராணத்தை உரைக்கின்றேன்.

இனி, இச் சிவபுராணத்தை ஓதுவார்களுடைய வினைகள் யாவும் நீங்கும் என்றும் கொள்க.

**கண்ணுதலான் தன் கருணைக் கண் காட்ட வந்தெய்தி:-**

சிவபெருமான் நெற்றிக் கண்ணுடையவர். அது ஞான நேத்திரம்.

**'லலாடாக்ஷாய நம:'**

"நெற்றி நாட்டத்து நிமலன் அடியேன் மீது மிகுந்த திருவருள் சுரந்து கருணைக் கண்களால் அழைக்கப் பெற்றுப் பெருந்துறையை யடைந்தேன்" என்கின்றார்.

**எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி:-**

நினைப்பதற்கும் ஒண்ணாத அழகுடைய திருவடியை வணங்கி.

**விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்:-**

வானுலகு மண்ணுலகு என்ற உலகங்களிலெல்லாம் நிறைந்து இறைவன் அதற்கு அப்பாலும் விளங்குகின்றான்.

**விளங்கு ஒளியாய்:-**

விளங்கித் தோன்றுகின்ற ஒளிவடிவினன்.

**எண்ணிறந்து எல்லை யிலாதானே :-**

யாராலும் எக்காலத்தும் எந்த எண்ணிக்கையாலும் அளவிடப்பட முடியாத தன்மையன்.

**நின்பெருஞ்சீர் பொல்லா வினையேன்**
**புகழுமாறு ஒன்றறியேன்:-**

"இறைவா! உன்னுடைய சிறப்பைத் தீவினையேன் எவ்வாறு புகழ்வேன்?" என்று ஏங்குகின்றார்.

'புகழ்ச்சியைக் கடந்த போகமே' - *திருவாசகம்.*

'என்னானாய் என்னானாய் என்னி னல்லால்
ஏழையேன் என்சொல்லி ஏத்து கேனே' - *அப்பர்.*

**புல்லாகி.............. தேவராய்...............**
**எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்:-**

ஆன்மாக்கள் எண்ணில் காலங்களாக, எண்ணில்லாத வேறு வேறு பிறப்புகளை மாறி மாறி எடுத்து இளைத்து விடுகின்றன.

"எழுகடல் மணலை அளவிடி னதிகம்
எனதிடர் பிறவி அவதாரம்"

- திருப்புகழ்.

தாவரம்-நிற்பன; சங்கமம்-அசைவன; சராசரங்களாகிய பிறப்புகள் எல்லாவற்றிலும் வினையின் காரணமாகப் பிறப்பதும் இறப்பதுமாகவே உயிர்கள் அலைகின்றன.

**மெய்யே உன்பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்:-**

இறைவனுடைய திருவடிகளைக் காணப் பெற்ற உயிர்கள் விடுதலை யடைகின்றன.

வீடு-விடு என்ற முதனிலை நீண்டு வீடு என வந்தது. விடுபடுவது வீடு. பந்தத்தினின்றும் நீங்குதல்.

**உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா:-**

உண்மைப் பொருளே! அடியேன் உய்யும் பொருட்டு என் உள்ளத்துள் ஓங்கார வுருவாய் நின்றவனே.

ஓம் என்பது எல்லா ஒலிகட்கும் மேலாகவுள்ளது பிறவிப் பெருங்கடலைத் தாண்டச் செய்யும் தனிமந்திரம் ஆதலால், அது தாரகம் எனப் பேர் பெறும்.

உலகங்கள் யாவும் அந்த ஓங்காரத்தில் தோன்றி ஓங்காரத்துள் ஒடுங்கும். ஆடுகின்ற மயில், சங்கு, நமது செவி, பிள்ளையார் திருமுகம் முதலியன ஓங்கார உருவாய் விளங்குவதை யுணர்க.

ஓமெனும் ஓங்காரத் துள்ளே ஒருமொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே உருவரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே.

- திருமந்திரம்.

**விமலா:-**

மலம் இல்லாதவன் விமலன். அநாதிமல முத்தன்.

**விடைப்பாகா:-**

பாகன் - செலுத்துபவன்.

விடையைச் செலுத்துபவன் சிவபெருமான்.

விடை என்பது தருமம். தருமத்தை நடாத்துபவன் என்பது பொருள்.

**வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே:-**

வேதங்கள் இறைவனை அறியமாட்டாது நின்று ஐயா என்று அலறி நிற்கின்றன.

இறைவன் உயர்ந்தும், ஆழ்ந்தும், பரந்தும், நுணுகியும் இருக்கின்றான்.

மறைகளின் முடிவால் வாக்கால்
மனத்தினால் அளக்கொ ணாமல்
நிறைவுடன் யாண்டு மாகி
நின்றிடு நிமல மூர்த்தி' - கந்தபுராணம்.

**வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா:-**

வெய்யாய் - வெப்பமானவன்;

தணியாய் - குளிர்ந்தவன்;

வெப்பம்-சிவம்; தட்பம்-சக்தி; இயமானன்-யாக கர்த்தா. யாகமூர்த்தியாக இருக்கும் முருகனைக் குறிக்கும்; சிவம், சத்தி, முருகன், மூன்றுமாய் நின்ற கோலம் சோமாஸ்கந்த மூர்த்தி.

**பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி:-**

பொய்யான நினைவு சொல் செயல் ஆகிய அனைத்தும் அகலுமாறு இறைவன் குருவடிவாக வந்து அருளி.

**மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே:-**

உண்மையான உருவாகி ஒளி செய்கின்ற மெய்ச் சுடர் இறைவன்.

**எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே:-**

*பாச ஞானம், பசு ஞானம், பதி ஞானம் என ஞானம் மூன்று வகைப்படும். இவற்றுள் எந்த ஞானமும் இல்லாதவன். அப்படிப்பட்ட எளியேனுக்கு இன்பத்தை வழங்கிய பெருமானே!*

**அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே:-**

*உயிர்களிடத்து அநாதியேயுள்ள அறியாமையை திருவருட் சத்தியால் நீக்குகின்ற அறிவுப்பொருளே!*

**ஆக்கம் அளவு இறுதி இல்லாய்:-**

*ஆக்கம் - ஆக்கப்படுதல்*

*அளவு - ஒரு கால எல்லை வரையில் நிற்றல்*

*இறுதி - முடிவு*

*இறைவன் இந்த மூன்றும் இல்லாதவன்.*

**ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்:-**

*ஆக்கல்-உயிர்கட்கு உடம்பு கருவி உலகம் முதலியன அமைத்துத் தருதல்.*

*காத்தல்-உயிர்கள் உடம்பில் நின்று இரு வினைப் பயன்களை நுகருமுகத்தால் அறியாமையைத் தேய்த்து அறிவை வளரச் செய்தல்.*

**அழித்தல் :**

*இருவினை நுகர்ச்சிக்கண் உடம்பு மெலிந்து உயிர் அயர்ச்சியுற்றபோது மீட்டும் படைத்தற்கு முன் சில காலம் வரை இளைப்பாறச் செய்தல்.*

**மறைத்தல் :**

*பிறவிகள் தொடர்பு பட்டு வரும் இருவினை நுகர்ச்சி*

களை அடுத்தடுத்து மறக்கச்செய்து மேலும் மேலும் அவற்றை நுகருதற்கண் அவாவினை எழுப்புதல்.

**அருளல்:-**

இருவினைப் பயனும் நுகர்ந்தொழித்து அறிவு ஓங்கி, அறியாமை வலி அடங்கியபின் தனது திருவடிப் பேரின்பத்தை வழங்குதல்.

**போக்குவாய்:-**

அடியேனுடைய வினைகளைப் போக்குவாய்.

வினை - அவாய்நிலை.

**என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பில்:-**

அடியேனை உனது திருத்தொண்டில் புகுவித்து ஆண்டருளினாய்.

**நாற்றத்தின் நேரியாய்:-**

பூவின் மணம்போல் அடியார்களின் உள்ளத்தில் இறைவன் இருப்பன்.

**சேயாய் நணியானே:-**

அன்பரல்லார்க்கு இறைவன் தூரத்தில் உள்ளவன்; அன்பர்க்குச் சமீபத்தில் உள்ளவன்.

"புறமுமாய் அகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
போக்கொடு வரத்து மாகி" - *தாயுமானவர்.*

**மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே:-**

மாற்றம்-சொல்; மனம்-நினைக்குங் கருவி; சொல்லுக்கும் நினைவுக்கும் அப்பாற்பட்டவனாக இறைவன் நிற்கின்றவன். "அவாங் மனோகோசரன்"

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போல
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்:-

நெய் என்ற சொல்லுக்குத் தேன் என்றும் பொருளுண்டு; அடியார்களின் உள்ளத்தில் இறைவன் பாலும் தேனும் கன்னலும்போல் தித்தித்து நின்று பிறப்பறுத்துப் பேரருள் புரிகின்றான்.

நிறங்கள் ஓர் ஐந்துடையாய்:-

இறைவன் மண் புனல் அனல் காற்று வெளி என்ற ஐம்பெரும் பொருள்களிலும் கலந்து நிற்பவன். அதனால், அவற்றின் நிறங்களை இறைவனுடைய நிறங்களாக ஏற்றிச் சொல்கின்றனர்; ஏனெனில்,

'இப்படியன் இந்நி றத்தன் இவ்வண் ணத்தன்
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே

- *அப்பர்.*

மண்ணின் நிறம் - பொன்மை

நீரின் நிறம் - வெண்மை

நெருப்பின் நிறம் - செம்மை

காற்றின் நிறம் - கருமை

வானின் நிறம் - புகைமை

இக்கருத்து சிவஞான சித்தியாரில் வருகின்றது.

விண்ணோர்கள் ஏத்த மறைந்திருந்தாய்:-

வானவர்கள் துதி செய்தும் இறைவன் அவர்கட்குத் தோன்றாது மறைந்திருக்கின்றனன். கேனம் முதலிய உபநிடதங்களைக் காண்க.

**வல்வினையேன் றன்னை மறைந்திட மூடிய மாய இருளை:-**

கொடிய வினையுடைய அடியேனுடைய அறிவு மறையுமாறு மூடியுள்ள இருளாகிய ஆணவ மலத்தை மாய்க்கும்பொருட்டு, இறைவன் இந்த வுடம்பையும் கரணங் களையுந் தந்தனன்.

**அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி:-**

நல்வினை தீவினை என்ற இரு கயிறுகளால் கட்டி.

> 'ஏழையின் இரட்டை வினையாயதொ ருடற்சிறை
> யிராமல் விடுவித்தருள் நியாயக்காரனும்
> - *திருவகுப்பு.*

**புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி:-**

இறைவன் நமது உடம்பில் எலும்பு மலசலம் புழு உதிரம் முதலியவற்றை மறைக்கும் பொருட்டு மேலே மெல்லிய தோலை மூடி வைத்து உதவி புரிந்திருக்கின்ற னன்.

**மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை:-**

குடில் - குடிசை; ஒன்பது வாயில்களிலும் மலம் வடியக் கூடிய அசுத்தமான உடல்.

**மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய:-**

மலங்குதல்-மாறுபடுதல். ஐம்புலன்களும் மாறுபட்டு வஞ்சனைச் செயல்களைச் செய்கின்றன.

> "ஓரவொட்டார் ஒன்றை உன்னவொட்டார் மலர் இட்டுனதாள்
> சேரவொட்டார் ஐவர் செய்வதென் யான்" - *அலங்காரம்.*

**விலங்கு மனத்தால் விமலா உனக்குக்**
**கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்**
**நலந்தான் இலாத சிறியேன்:-**

விலங்குதல் - எதிரில் நின்று தடுக்கும்.

இறைவனை உள்ளூற நினைத்து நினைத்துக் கசிந்து உருகுவது நலம் என உணர்க.

நலம் என்ற சொல்லுக்கு உள்ளம் உருகுதல் பொருள் என்று அடிகளார் கூறும் அருமையை அறிக.

> 'நாதனார் கழல்கள் வாழ்த்தி
> வழிபடு நலத்தின் மிக்கார்" - *பெரியபுராணம்*
>
> 'எல்லாமற என்னை யிழந்த நலம்' - *அநுபூதி*

இறைவனை நினைக்கின்றபோது ஏனைய நினைவுகள் யாவும் கழன்றுவிடுகின்றன.

நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி:-

சிறியேனை ஆட்கொள்ளும் பொருட்டு அளவற்ற கருணையால் இந் நிலவுலகில் வந்து திருமால் தேடியும் எட்டாது நீண்ட திருவடியைக் காட்டியருளினார்.

நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே:-

நாயினும் கடைப்பட்ட அடியேனுக்குத் தாயினும் உயர்ந்த தண்ணளியுடன் அருள்புரிந்தான்.

> "பால் நினைந்தூட்டுந் தாயினும் சாலப் பரிந்து"
> "தாயான செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ"
> - *திருவாசகம்.*
>
> 'ஆய்புரி அருட்செறிந் தவிநாசியுள் மேவிய பெருமாளே'
> - *திருப்புகழ்*

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே:-

மாசு - அழுக்கு

ஒரு சிறிதும் களங்கமே யில்லாத ஒளி நிறைந்த மலரின் சோதியே.

**தேசனே தேனார் அமுதே சிவபுரனே:-**

தேசன் - ஆசாரியன்.

தேன் ஆர் - இனிமை நிறைந்த

அமுது - அழிவில்லாதது

சிவபுரம் - கைலாயம்.

**பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே:-**

பாசமாகிய மும் மலங்களையும் கட்டறுத்து என் அறிவினை வளர்க்கும் மேலோனே.

பாரித்தல் - வளர்த்தல்

'பண்பின்மை பாரிக்கும் நோய்' - *திருக்குறள்*

**நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்**
**பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே:-**

நேசம் - அன்பு

அன்பு - தொடர்புடையாரிடம் காட்டும் பரிவு.

அருள் - தொடர்பிலாதாரிடமும் காட்டும் பரிவு.

இறைவன் தன்னை நினைக்கும் அடியாரிடம் அன்பு செய்வதுடன், நினையாத உயிர்களிடத்தும் அருள் புரிகின் றான். அதனால், நேச அருள்புரிந்து என்றார். நெஞ்சிலே கிடந்த வஞ்சனைகள் நீங்குமாறு இறைவன் அடிகளாரது நெஞ்சில் நீங்காது நின்று பெருங்கருணை வெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடுமாறு அருள்புரிகின்றான்.

**ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே:-**

உலகப் பொருள் நுகரும்போது தெவிட்டும். இறைவன் தெவிட்டாத அமுதமாக விளங்குகின்றான். மேலும் அளவு இல்லாத பெருமையுடையவன்.

**ஓராதார் உள்ளத்துள் ஒளிக்கும் ஒளியானே:-**

ஓர்தல்-ஆராய்தல்.

இறைவனுடைய அருட் குணங்களை ஆராய்ந்து உணராதார் உள்ளத்தில் விறகில் தீ மறைந்திருப்பதுபோல் ஒளிந்திருக்கின்றான். ஒளிந்திருப்பினும் அவன் ஒளியினன்.

**நீராய் உருக்கி என் ஆருயிராய் நின்றானே:-**

நமது நெஞ்சம் கல்லினும் கடினமானது. "நெஞ்சக் கனகல்", "திணியான மனோ சிலை" என்கின்றார் அருண கிரிநாதர் அநுபூதியில். அத்தகைய கருங்கல் மனத்தை இறைவன் நீராய்க் கரைந்து உருகுமாறு செய்துவிட்டான். கரைத்து உயிர்க்குயிராய் நின்று இன்பத்தை வழங்கு கின்றான்.

**இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே:-**

இறைவன் இன்ப துன்பமில்லாதவன், எனினும் உயிர் களுடன் ஒன்றி நின்று அவன் துய்த்தாலன்றி நாம் துய்க்க மாட்டோம்; ஆதலின் 'உள்ளானே' என்றார்.

**அன்பருக் கன்பனே:-**

அன்பருக்கு அன்புடையவனாக எம்பெருமான் விளங்கு கின்றான்.

**யாவையுமாய் அல்லையுமாம்:-**

எல்லாப் பொருள்களிலும் இறைவன் உடனாக நிற்பத னால் "யாவையுமாய்' என்றார். சுக துக்கங்கட்கு இறைவன் வேறாக நிற்பதனால் "அல்லையுமாம்" என்றார்.

ஒரு நாடகம் நடக்கும்பொழுது விளக்கு எல்லாப் பாத்திரங்களையும் நடத்தி இன்ப துன்ப நிகழ்ச்சிகளை நிகழ வைத்துச் சாட்சி மாத்திரமாக நிற்பதுபோல் என அறிக.

**சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே:-**

அகச் சமயத்தார்க்கு இறைவன் அருட்பெருஞ் சோதியாய் நின்றவன்; புறச் சமயத்தார்க்கு இருளாய் நின்றவன்.

> 'புறச் சமயத்தவர்க் கிருளாய்
> அகச் சமயத் தொளியாய்' - *சிவப்பிரகாசம்.*

> 'இருளன் றொளியன் றெனநின் றதுவே' - *அநுபூதி.*

இறைவனுடைய பெருமை ஆராய்ச்சிக்கும் அறிவுக்கும் வேதாகமங்கட்கும் எட்டாதது.

**ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே:-**

இறைவன் எப்பொருட்கும் முதலாக நின்றவன். முடிவும் இல்லாதவன்.

**ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே:-**

காந்தம் இரும்பை இழுப்பதனைப்போல் இரும்பு மனத் தேனை ஈர்த்து என் பிதாவாகிய சிவபெருமான் அடியேனை ஆட்கொண்டருளினான்.

**கூர்த்த மெய்ஞ்ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தில் நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே:-**

கூரிய சீரிய உண்மை ஞானம் உடையவர்கள் அறிவில் இறைவன் அறிவுக்கறிவாய்ப் பிரிவற நிற்கின்றவன். ஆதலின், அவர்கள் வேறாக நின்று நோக்குவதில்லை.

> 'அறிவொன் றறநின் றறிவா ரறிவில்
> பிறிவொன் றறநின் றபிரா னலையோ' - *அநுபூதி.*

இறைவன் போவதும் வருவதும் கூடுவதும் இல்லாதவன்.

> **ஊரிலான் குணங்குறியிலான் செயலிலான் உரைக்கும்**
> **பேரிலான் ஒரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்**

சாரிலான் வரல் போக்கிலான் மேலிலான் தனக்கோர்
நேரிலான் உயிர்க்கடவுளாய் என்னுளே நின்றான்.

*- கந்த புராணம்.*

**காக்கும் எம் காவலனே காண்பரிய பேரொளியே:-**

*உயிர்களுக்குத் தோன்றாத் துணையாக நின்று என்றும் காத்தருளும் பாதுகாவலன்.*

*காண்பதற்கு அரியவன்; பேரொளி மயமானவன்.*

**ஆற்றின்ப வெள்ளமே:-**

*சன்மார்க்கத்தில் பெருக்கெடுத்தோடும் அருள் வெள்ளம் ஆண்டவன்.*

**... ... ... அத்தா மிக்காய் நின்ற**
**தோற்றச் சுடரொளியாய் சொல்லாத நுண்ணுணர்வாய்**
**மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்**
**தேற்றனே:-**

*மிகவும் விளங்கித் தோன்றுகின்ற உதயசூரியன் போன்ற ஒளிமயமாகியும், சொல்லுதற்கு முடியாத மிக்க நுண்ணிய உணர்வு மயமாகியும், வேறு வேறு நிலையில் உள்ளவர்கட்கு வேறு வேறு மூர்த்தியாகக் காட்சியளித்து நிற்கும் அறிவின் தெளிவு இறைவன்.*

**மாற்றமாம் வையகம்:-**

*உலகிலே காலம், இடம், ஊழ், நடை, குணம், பிறப்பு முதலிய அநேக மாறுபாடுகள் அமைந்திருக்கின்றன. ஒவ்வொருவரும் வேறு முகம், வேறு வேறு ரேகைகள் உடையவர்கள்.*

**தேற்றத் தெளிவே என் சிந்தனையுள்**
**ஊற்றான உண்ணாரமுதே உடையானே:-**

*பல்வேறு மூர்த்தம், பல்வேறு சமயங்கள், பல்வேறு*

நெறிகள் இருப்பினும், அவற்றுள் இதுவே அருமையும் எளிமையும் இனிமையும் உடையதென்று தெளிந்தவர்க்குத் தெளிவான பொருளே!

அடியேனுடைய நினைவினுள் ஊற்றெடுத்துச் சுரந்து பெருகி வரும் உண்பதற்கு இனிய அரிய அமுதமே! என்னை அடிமையாக உடையவனே!

**வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப ஆற்றேன்:-**

"பஞ்ச பூதங்களின் வேறுபாடாகி விகாரப்பட்ட இப்புலால் உடம்பினுள் அடியேன் பொருந்தியிருக்கும் தன்மையைப் பொறுக்கமாட்டேன்.

இவ்வுடம்பு அருவருப்பானது. மலசல பாண்டம்; பித்தமும் சீயும் உடையது. இதனுள் எத்தனைக் காலம் அடியேன் கிடந்துழல்வேன்"

நாலு பேர் சுமக்கும் இந்த ஊன் சுமையை நான் ஒருவனே சுமந்து கொண்டிருக்கின்றேன்.

**மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்**
**உற்றார்க் குடம்பும் மிகை.** *- திருக்குறள்*

**'ஆனாலும் இந்த உடம்போ டிருப்ப தருவருப்பே'**

*- பட்டினத்தார்.*

"புன்புலால் உடம்பின் அசுத்தமும் இதனில்
புகுந்துநான் இருக்கின்ற புணர்ப்பும்
என்பொலா மணியே எண்ணிநான் எண்ணி
ஏங்கிய ஏக்கம்நீ யறிவாய்" *- திருவருட்பா.*

**எம்ஐயா அரனேயோ என்றென்று**
**போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார் :-**

எங்கட்குத் தலைவனே! அரனே! என்று துதி செய்து ஓவென்று அழைத்துப் போற்றுகின்றவராய் பொய்மையை யொழித்து மெய்யுணர்வு பெற்றனர் பெரியோர்கள்.

அரன்-வினைகளை அரிப்பவன்.

பொய் என்பது பொருள் அல்லாத நிலைபேறில்லா தவைகளைப் பொருளாகவும் நிலையாகவும் கருதுகின்ற மயக்க உணர்ச்சி.

மறுபிறப்பும் இருவினைப் பயனும் இறைவனும் இல்லை யென்று எண்ணும் திரிபுணர்ச்சி. இது கெடுதலே. பொய் கெடுதலாகும். மெய்யானார் - மெய்யுணர்வு பெற்று விளங்குதல்.

இங்ஙனம் பெற்றவர்கள் மீண்டும் பிறப்பு எய்தார். இதனை அடியில் அருளிச் செய்கின்றார்.

**மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே**
**கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே:-**

பொய்யுணர்வுபோய் மெய்யுணர்வு பெற்ற சிவஞானி கள் மீளவும் இப்பூவுலகிற்கு வந்து வினையாலாய உடம்பை எடுக்கா வண்ணம், வஞ்சனையைச் செய்யும் புலன்களுக்கு இடமாகிய இச்சிறு வீடாகிய உடம்பின் கட்டினை அழித்து அருள்புரிய வல்லான் இறைவன்.

குரம்பை - சிறுவீடு.

"குரம்பை மலசலம்" - திருப்புகழ்.

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவார்
மற்றீண்டு வாரா நெறி. - திருக்குறள்.

பிறவிக்குக் காரணம் வினை; வினை விதியாகி விதியால் உடம்பு வருகின்றது.

'வினைப் போகமே ஒரு தேகங் கண்டாய்'
- பட்டினத்தார்.

"விதிகாணும் உடம்பை விடா வினையேன்"
- அநுபூதி.

வினை ஒழிந்தால் பிறப்பு ஒழியும் என உணர்க.

**நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே:-**

நள் நடு. சர்வ சங்காரத்துக்குப் பின் எல்லாவுயிர் களும் உணர்வுஞ் செயலும் அற்று அறியாமையாகிய வல்லிருளில் அழுந்திக் கிடக்கும் காலத்தைக் குறிக்கின்றது. அந்த இருளில் இறைவன் உயிர்களின் நலத்தின் பொருட்டு ஓவாது நடனம் புரிகின்றான். பயின்றாடுதல்-பலகாலும் ஆடுதல்.

**தில்லையுள் கூத்தனே தென்பாண்டி நாட்டானே:-**

இங்ஙனம் நள்ளிருளில் ஆடும் நாதன், தில்லையிலும் ஆடுகின்றான். செந்தமிழ் சிறந்து வழங்கும் தென்பாண்டி நாட்டிற்கு உரியனாக விளங்குகின்றான்.

**அல்லல் பிறவி யறுப்பானே:-**

பிறவி அநேக அல்லல்களுக்கு இடனாயது.

"அல்லல் பிறவி யலமலம்" - கந்தபுராணம்.

இப் பிறவியை அறுத்து இறைவன் அருள்புரி கின்றான்.

**சொல்லற் கரியானை சொல்லி:-**

இறைவனுடைய புகழ் சொல்லுதற்கு அரியது. எனினும் இயன்ற மட்டும் சொல்லித் துதிக்கவேணும்.

**திருவடிக்கீழ் சொல்லிய பாட்டு:-**

மணிவாசகனார் தற்போதம் இன்றி இறைவனுடைய திருவடியின்கீழ் அடங்கி அருள்மயமாக நின்று இப் பாடலை அருளிச் செய்தார்.

**பொருள் உணர்ந்து சொல்லுவார்:-**

இத் திருவருள் செறிந்த சிவபுராணத்தினைப் பொருள் உணர்ந்து சொல்லுதல் வேண்டும். அங்ஙனம் சொல்லுந்

தவமுடையார்கட்கு உண்டாகும் பயனை அடுத்த வரியிற் கூறுகிறார்.

**செல்வர் சிவபுரத்தில்:-**

சிவபுராணத்தைப் பொருளுணர்ந்து பாராயணம் புரிந்தால் சிவபுரமாகிய திருக்கயிலாயத்தை யடைவார்கள்.

**உள்ளார் சிவனடிக்கீழ் பல்லோரும் ஏத்தப் பணிந்து:-**

பாராயணம் புரிந்து, சிவபுரத்தில் சென்றதோடு அமையாமல், பலரும் துதிக்கப் பணிவுடையராய்ச் சிவபெருமான் திருவடிக்கீழே இன்புற்று இருப்பார்கள்.

பல்லோரும் ஏத்தப் பணிந்து சிவனடிக்கீழ் உள்ளார் எனக் கொண்டு கூட்டுக.

## கருத்துரை

"நமச்சிவாய வாழ்க' என்று தொடங்கி, "மலை போற்றி" என்பதுவரை இறைவனை வாழ்த்தியும் வெல்க என்று போற்றியும் கூறினார்.

இதனை ஓதுவதற்குக் காரணங் கூறுவாராகி "சிவன் அவன்" என்று தொடங்கி, "வினை முழுதும் ஓய உரைப்பன்" என்பதுவரை நூற்பயன் கூறி யருளினார்.

"கண்ணுதலான்" என்று தொடங்கி, "புகழுமாறு ஒன்று அறியேன்" என்பதுவரை அவையடக்கம் அறைந்தார்.

"புல்லாகி" என்பது முதல், "இளைத்தேன்" என்பது முடிய பிறவித் துயரைப் புகன்றார்.

பின்னர் "மெய்யே உன் பொன்னடிகள்" என்பது முதல், "தென் பாண்டி நாட்டானே" என்பதுவரை, இறையியல்பு,

உயிர்கட்கு இறைவன் புரியும் உதவி, பிறவியறுத்தல் முதலியன கூறி யருளினார்.

"அல்லல் பிறவி" தொடங்கி, "பணிந்து" என்பதுவரை பக்குவப்பட்ட உயிர் பெறும் திருவடியின்பத்தைச் செப்பி முடித்தருளினார்.

*சிவபுராண உரை முற்றிற்று*

## மாணிக்கவாசகர் வாழ்த்து

சொன்னவனைத் துளகலையும்
பயிலாமாத் தியர்குலத்துத்
தோன்றி யாங்கோர்
தென்னவனை யரசுரிமைத்
திறல்செயுமந் திரியாகித்
தென்னர்க் கெல்லாம்
முன்னவனைப் பின்னுசடை
முடியின்மேற் பொன்னின்முடி
சூட்டி யாண்ட
மன்னவனை மதுரையிலே
குதிரைவிற்கச் சொன்னவனை
வணக்கஞ் செய்வாம்.

– திருக்குற்றாலத் தலபுராணம்

# SASHTIABDHAPOORTHI

## THE SIGNIFICANCE OF SASHTIABDHAPOORTHI:

The word itself has its meaning as "Sashti" - 60, "abhda" - years/life and "poorthi" -completion. There are 60 years in a Hindu calendar cycle. Each year has a name. When a person reaches 60 years of age, such person enters the second cycle. Historically, because the husband would typically always be older than wife, Sashtiabdhapoorthi is celebrated when the husband (as opposed to the wife) turns 60.

At sixty, man had crossed only 50% of his life because the actual span of his life is 120 years according to Vedas. A 60th year, which is just half the span of time originally given to man is considered a critical period .According to the science of Hindu numerology, 6 happens to be an uneasy number and therefore 60 is a time when the ruling planet of a person may have an adverse effect on a man's life; He performs a religious Shanti, a measure undertaken to ensure good health, peace and longevity.

One Samvatsara Cycle consists of 60 years starting from Prabhava, Vibhava, etc. . . .In the cycle of years the current year is called "KARA"(upto say 13th of April-2012 ) To ward off from Bhootha- Pretha – Mruthyu Bhaya and to get rid of all sins acquired till then - this Kaamyartha Sashti Abdha Poorthi karma should be performed. During this shaanthi one also seeks from the God- good health and poorna Aayu: for himself as well as for his family members.

## THE CONCEPT OF RUDHRA EKADHASI:

The vedic tradition, the cultural richness, of our country cannot be compared to any other country in the world. The Rishis and Maha-purushas made it a star, a crest-jewel in the crown of the Universe.

Sri Rudram-Chamakam occupies a very important place in Vedic literature and in the practice of Vedic Religion. It is the heart of Krishna Yajurveda. Sivapanchakshari Mantram is enshrined in it. Among the Vidyas, the Vedas are supreme; in the Vedas the Rudra Ekadasi is supreme; in the Rudram the Panchakshari Mantra 'NAMASHIVAYA' is supreme; in the Mantra the two letters 'SHIVA' is supreme. As by pouring water at the root of a tree, all its branches are nourished, so also by pleasing Rudra through Rudra Japa, all the Devas are pleased. This is the best atonement (Prayaschittam) for all sins and the foremost 'Sadhana' for attainment of cherished desires.

- The importance: Rudra is Death and Homas are done to Him as "Mrityave Swaahaa" meaning "I sacrifice unto the God of Death". But He is also the "Mrityunjaya" meaning the "Conqueror of Death, the Lord of Immortality". Rudra is also "Aashutoshin"- one who is easily pleased. And the easiest method of pleasing Him is by the Rudram.

- A verse in the Vayu Purana says: "A person reciting and applying daily the Namakam, Chamakam and the Purusha Sooktam is honoured in the Brahma loka." The Namakam referred to in it is the Rudram, abounding in the word 'Namah'.

- The word Rudra has got 4 root meanings:

a) Dreadful, terrific angry.
b) Great or large.
c) Driving away evil.
d) Fit to be praised.

- Sri Rudhram occurs in the middle of the Taittiriya Samhita of Sri Krishna Yajur Veda (i.e.) in the 4th Kandam, '5th Prasnam, in 11 Anuvakas of 169 mantras in total. It speaks of Lord Siva's several forms, His omniscience, His omnipresence and omnipotence, in choice and sweet pada renderings.

- The Rudra Prasna as well as chamaka prasna contains 11 paragraphs. We recite Rudram in multiples of eleven. If Rudra is recited 121 times (112) it is known as "Rudra Ekadasi". When chanted 1331 times (113) it is known as

"Maharudra". When chanted 14641 times (114) it is known as ATHI RUDRAM. The Rithviks, who recite Sri Rudram are arranged in groups of eleven. Each group comprising of eleven, is called one "Gana". There will be eleven ganas comprising of 121 Rithviks reciting Sri Rudram for eleven days - each day eleven times, preceded by Mahanyasam.

- Eleven forms of Lord Siva worshipped in Sri Rudra Yajnas are :

1. Mahadeva, 2.Siva, 3.Rudra, 4.Sankara, 5.Neelalohita, 6.Easana, 7.Vijaya, 8.Bhima, 9.Devadeva, 10. Bhavodhbhava and 11.Adityatmaka Rudra.

- The following deities and great souls and rishis are propitiated and worshipped:

Mrutyunjaya, Brahma, Vishnu, Rudra, Markandeya, Navagrahas, Sapta Chiranjeevins (Aswathama, mahabali, Vyasa, Hanuman, Vibheeshana, Krupa and Parasurama), Ayur Devata, Samvatsara Devatas, Nakshatra Devatas, Ashtadikpalas, Saapthag Rishis.

All these devatas, great souls and rishis are pleased by the repeated chanting of their mantras, offering pujas, homams in Agni with appropriate samits and they bless the person celebrating 60th birth day.

- The main aspect of celebration is Kumbha or Kalasa stapanam. There are rules governing how and where these Kalasas are to be placed, and this will be guided to the householder by the Vedic scholars conducting the rituals and the sanctification process is religiously observed.

The kodam that is placed on the rice is like God Himself. The rice platform acts like a throne for him. The wrapping of the kodam with a vastram, thus, signifies the clothing of Him. The water that is held in the kodam is very holy for the same reason.

- The following 11-mangala dravyas are to be applied.

1. Gorochana: To be applied on the heads of Husband and wife for longevity, health, fame, courage and prosperity.
2. Cow's milk curd: smear a small quantity on their foreheads (for prosperity, sweet, fragrance and comforts around forever).

3. Cow's Ghee: Smear a little amount of cow's ghee on their eyelids. (For brightness, good appearance and good conduct.)

4. Green grass: Keep few grasses on their heads (Longevity, devoid of diseases and for very strong body).

5. Cow's milk: A spoonful of cow's milk should be sprinkled on their heads (for strength and longevity).

6. Fruits: Touch fruits with hands.

7. Flowers: wear flowers on the heads with veneration.(Religious zeal)

8. Mirror: see the faces in the mirror (for disappearance of poverty evil devatas and ugliness).

9. Lighted Lamp: See the lighted lamp (Let there not be darkness, and lack of knowledge).

10. Earth soil: Touch the earth brought from beneath the Tulsi plant.

11. Gold: Keep a gold coin or an ornament on the head. The gold removes all sins and brings comforts.

Ø In the Sooktha Japa Rakshogni Mantras, Pavamana Sooktha, Varuna Sooktha, Thryambaka and Rudra Gayathri Mantras, Dik Palaka mantras, Brahma Vishnu Rudra/ Durga/Sree/Bhoo/Mruthyu/Ayushya/Baagya etc. sookthams are chanted. Sri Rudram/Chamakam and Purusha Sooktham are also chanted This Japa conclude with Nakshatra Sooktham, Grutha Sooktham, Pancha Shaanthi and Ghosha Shaanthi. If possible, first panchathi from each of the 44 anuvakas from the Yajur Veda Samhitha are also chanted.

● Next to completion of the japam, Homam would be performed with 108 aahuthees chanting Thrayambaka Mantras. Samith, Ghee (Aajyam)

Havis (in some places til seed is also used). Homam is concluded with Swishta Krutha and Jayanthi Homam.

- After mangala dravyas are applied the couples take bath in sanctified water from the Kalasa wherein rituals are already performed.

The water collected in the kodam has been now strengthened by the vedas and is even more holy, powerful and all healing. So by showering it onto husband and wife, it is like transferring the power and strength to them. A little water is left behind for others too.

- Phaladhanam is to be given to all the participants towards mutual wish of gratitude. The giver pleases the receiver and the receiver blesses the giver.
- The Dasa Dhaanams (10 types of gifts) that can be given to Vedic experts are as follows:

1. Cow Dhaana is given praying for peace/prosperity etc.Generally substituted by a Coconut and Go Moolya (that is price of a cow- Uttaranga Go Dhaana)
2. Bhoo Dhaana: Land for cultivation or dwelling should be given. (Generally substituted by Sandal Wood piece).This Dhaana is given praying for comfortable living.
3. Sesame in a copper vessel or iron vessel is given praying for removal of all sins.
4. Hiranya (Gold) Dhaana is given again praying for removal all acquired sins.
5. Ghee in a bronze Vessel for pleasing of all devathas and praying for removal of all aarjitha papas.
6. Vastram (Veshti-Uthareeyam)–Praying for good health and prosperity.

7. Foodgrains (Paddy/Rice/Wheat etc) Praying for Subhiksham in life.
8. Jaggery: To Please Goddess Lakshmi and seeking all prosperity
9. Silver: To please piturs/ Maha Vishnu seeking their blessings.
10. Lavanam (Salt) To Please Sri Rudra seeking good health. Some people give Pancha Dhaana also (Gift of 5 items) apart from the above. They are Deepam, A religious book, a bell, Vastram, and Udhaka Kumba (Brass or Copper vessel with water). These Dhaanas are made seeking the Blessings of all Devathas/ purohits etc.

Ø Bhoori Dhakshina is given to all Scholars and other elders who have graced the occasion. Finally Pala Dhaana to be given to one and all who has come for the function. The above two Dhaanas are given seeking their good wishes.

**THE MAANGALYA POOJA:**

Finally maangalya pooja is performed with chanting of mantra. The wife is seated facing eastwards and the husband stand facing north. He ties the "Thirumangalyam' around the neck of his wife with the blessings of all Gods, Goddesses and Rishis. Function would be concluded by Maha Aashirvadams from Vedic experts and the elders present there. Thus the celebration comes to an auspicious end. It's a real blessing to see one's parents' wedding. :-)

80th. birthday is the next milestone when he is felicitated for having seen "a thousand full -moons (Sahasra Chandra Darshanam)".

